Tyāgarāja svāmi Kīrttanaika

# ஸ்ரீ த்யாகராஜஸ்வாமி — — கீர்த்தனைகள்

இஃது

காஞ்சி - மஹாவித்வான்

ராமாநந்தயோகிகளால்

தமிழில் எழுதப்பட்டு

சங்கீதவித்வான்

கே. வி. ஸ்ரீநிவாஸ அய்யங்காரால்

பரிசோதிக்கப்பட்டு


சென்னை:

எம். ஆதி அண்டு கம்பெனியாரால்

வெளியிடப்பட்டது.

ரிஜிஸ்தர் செய்தது] 1921 [விலை ரூபா 3—0—0

இப்புத்தகத்தி லுபயோகிக்கப்பட்டிருக்கிற தெலுங்கு உச்சரிப்புள்ள தமிழ் எழுத்துகள்.

| தெலுங்கு | தமிழ் | தெலுங்கு | தமிழ் |
|---|---|---|---|
| క | க | ధ | த$^{v}_{1}$ |
| ఖ | க$_{1}$ | న | ந |
| గ | க$^{v}$ | ప | ப |
| ఘ | க$^{v}_{1}$ | ఫ | ப$_{1}$ |
| ఙ | ங | బ | ப$^{v}$ |
| చ | ச | భ | ப$^{v}_{1}$ |
| ఛ | ச$_{1}$ | మ | ம |
| జ | ஜ | య | ய |
| ఝ | ஜ$_{1}$ | ర | ர |
| ఞ | ஞ | ఱ | ற |
| ట | ட | ల | ல |
| ఠ | ட$_{1}$ | వ | வ |
| డ | ட$^{v}$ | శ | ஶ |
| ఢ | ட$^{v}_{1}$ | ష | ஷ |
| ణ | ண | స | ஸ |
| త | த | హ | ஹ |
| థ | த$_{1}$ | ళ | ள |
| ద | த$^{v}$ | క్ష | க்ஷ |

குறிப்பு:—மேலே காட்டியிருக்கிற அட்டவணையைக் கவனிக்கவும். இதில் இரண்டு அடையாளங்கள் மாத்திரமே இருக்கின்றன ($^{v}$) இந்த அடையாளம் ஒரு கடின உச்சரிப்புள்ள எழுத்தை இலேசாய் உச்சரிக்கவேண்டுமென்பதைக் காட்டுகிறது. உம்:—க - క & க$^{v}$ - గ.

(,) இந்த அடையாளம் ஒத்தைக் காட்டுகிறது. அதாவது: மிகவும் கடினமாய் உச்சரிக்கவேண்டியதைக் காட்டுகிறது. உம்:—க$_1$ - ఖ கீ க$_1^v$ - ఘ, மேலும் க்ர - క్ర, க்வ - క్వ, த்ர - త్ర, த்$^v$ர - ద్ర, ப்$_1^v$ரா - భ్రా, இப்படி இதர எழுத்துகளின் ஒத்துடன் ஒன்றுகூடி ஒலிக்கிறவெழுத்துகளைக் கூட்டிப்படிக்கும்பொழுது முதல் தோன்றுகிற க், ங், ச் முதலிய ஒற்றெழுத்துகளைத் தோன்றித் தோன்றாவண்ணம் உச்சரிக்கவேண்டும்.

தமிழைப்போல் தெலுங்குபாஷையிலும் இரண்டு ரகரங்களிருக்கின்றன. ஆகையால் அதை யனுசரித்து இதிலும் ரகர வல்லின இடையினங்களை உபயோகிக்கப்பட்டது. தெலுங்கில் நகரம் ஒன்றே யாகையால் இதில் தன்னகரம் (ந) மாத்திரம் உபயோகிக்கப்பட்டது.

# முன்னுரை

தென்னிந்தியாவில் இதுவரையிலும் அநேக வாக்கேயகாரர்கள் தோன்றி மறைந்தனர்கள். அவர்களுள் தற்காலத்தில் புகழுடம்பு படைத்திருப்பவர்களின் தொகை மிக அற்பமெனக் காணப்படுகின்றது. ஸங்கீத ரத்நாகரத்தை யியற்றிய சாரங்கதேவருடைய காலம் இப்பொழுதிற்கு சுமார் எழுநூறுவருடம் முந்தியது. இந்த யேழுநூற்றுண்டுகளில் தோன்றி மறைந்த வாக்கேயகாரர்களின் தொகை சுமார் ஒருநூற்றிற்கு மேற்படவில்லை. இவர்களுள் சிலர் லக்ஷணகிரந்தங்களை யியற்றியும், சிலர் கீர்த்தனங்களைப் பாடியும் புகழுடம்பு படைத்தார்கள். கீர்த்தனங்களைப் பாடிய புகழ் மலிந்த வித்வான்களுள் ஞான வைராக்யச் சிறப்பினுலும், பக்தி என்கிற உள்ளன்புப் பெருக்கினுலும் சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்ததென கீர்த்தனங்களைப் பாடி பக்த சிகாமணியாய் விளங்கி ஸங்கீத உலகத்திற்குப் பேருதவி புரிந்தவர் ஸ்ரீமான் தியாகராஜஸ்வாமிகள் ஒருவரே யாவர்.

இவர் ஆந்திர பாஷையில் சொர்ச்சுவை பொருட்சுவை பொருந்தி, இனிமையாயுள்ள கீர்த்தனங்களைப் பாடியருளினுர். வடமொழியில் வால்மீக ராமாயணமும், தமிழில் கம்பராமாயணமும், தெலுங்கில் பாஸ்கர ராமாயணமும், ஹிந்துஸ்தானியில் துளஸீதாஸ் ராமாயணமும் எப்படி நிகர்ற்றவைகளாக விருக்கின்றனவோ அப்படியே

ஸ்ரீராம விப்லவ கானரூபமாகிய அய்யரவர்களின் கீர்த்த
னங்களும் நிகரற்றவையே யாகும். அய்யரவர்கள் வட
மொழியிலும் ஆந்திரத்திலும் விசேஷ பரிசயமுள்ளவ
ரென்பதற்குத் தடையில்லை. இதற்கு இவரியற்றிய 'பாலக
நகமய' 'எதுட நிலிசிதே' 'தொருகுண இடுவம்டி' முதலிய
பலகீர்த்தனங்கள் அத்தாக்ஷியாக விருக்கின்றன. மேலும்
அய்யரவர்கள் பற்பல இராமாயணங்களைப் படித்தவ ரென்
றும் இதர புராணங்களிலும் விசேஷ பரிசயமுள்ளவரென்
றும், இவருடைய கீர்த்தனங்களால் ஆங்காங்கு தெள்ளென
விளங்குகின்றது. இவரது கீர்த்தனங்கள் பற்பலவிடங்களில்
வால்மீகியின் அபிப்பிராயத்தையும், சிற்சில விடங்களில்
அத்யாத்மக ஆநந்தராமாயணங்களின் பொருள்களையும்,
வேறு சில விடங்களில் கம்பராமாயணத்தின் பொருளையும்
இன்னும் சிலவிடங்களில் இதர ராமாயணங்களின் பொருள்
களையும் தழுவியே வரையப்பட் டிருக்கின்றன. இந்த
ரஹஸ்யங்களை, 'ஸ்ரீராம' 'ராமா நீ ஸமானமு' 'ஒகமாட'
'மாஜாநகி' 'எம்தராநி' 'ஸ்வர ராக' முதலிய பற்பல கீர்த்த
னங்களால் காணலாம். பூர்வ கிரந்த கர்த்தர்களின் அபிப்
பிராயத்தைத் தழுவாத ஒரு கீர்த்தனையாவது இவரெழுதி
னரென்று எத்துணையும் புகலவியலாது. ஆகையால் இவ
ரது கீர்த்தனங்கள் முதநூலாகிய இராமாயணத்திற்கு ஓர்
வழிநூலென வமையும். இவரது கீர்த்தனங்களிலுள்ள
இத்தகைய நுட்பங்களை யறிய வேண்டுமானால் வடமொழி
யிலும் தெலுங்கிலும் விசேஷ பாஷா பரிஞானமும் பற்பல
புராண பரிசயங்களு மிருக்கவேண்டும். ஸ்வல்ப பரிசய
முள்ளவர்கட்கு இக் கீர்த்தனங்களின் பெருமை விளங்கா
தென்று திண்ணமாய்ச் சொல்லலாம்.

தியாகராஜஸ்வாமிகளுக்கு ஆந்திர பாஷையில் பரிசயமில்லையென்றும், விசேஷமாய் கிராம்ய பதங்களையே யுபயோகித்திருக்கிறாரென்றும் சில ரபிப்பிராயப் படுவதுண்டு. நானும் சிறிதுகாலம் வரையில் இவ் வபிப்பிராயமுடையவனாகவே யிருந்தேன். நான் தேசாடனம் செய்து வந்த காலத்தில் பற்பல விடங்களில் அய்யரவர்களின் கீர்த்தனங்களை பற்பல வித்வான்களால் பாடக் கேட்டேன். ஆங்காங்கு புலப்பட்ட பாட பேதங்களைக் கொண்டு யுற்று நோக்கும்பொழுது அய்யரவர்களின்மேற் குறைகூறுவது எவ்வளவும் தகாத காரியமென்றே எனக்கு நன்குவிளங்கியது. அய்யரவர்களைப்பற்றிய கீர்த்தனங்கள் தெலுங்கு பாஷையின் கந்தமேயின்னதென் றறியாத தமிழ்நாட்டிலேயே சுமார் ஒரு நூற்றாண்டிற்குமேல் சுத்த திராவிடர்களால் கையாடப்பட்டு வந்த தென்றால் எத்தகைய தேசியமும் கிராமியமாய் மாறுமென்பதற்குச் சந்தேகமுண்டோ? அய்யரவர்களின் சிடர்களில் சிலர் தமிழ்நாட்டிலுள்ள தெலுங்கர்கள். பலர் சுத்த திராவிடர்கள். அய்யரவர்களின் கீர்த்தனங்களைப் பாடும்பொழுது ஒரு திராவிடன் தப்பாய்ப் பாடினால் அதைத் திருத்துவதற்கு ஒரு தெலுங்கன் வேண்டுமல்லவா? 'ஊமைக்கு உளருவாயன் சண்டப் பிரசண்ட' னென்பதுபோல் கிராம்யத்தையே பேசிக்கொண்டு வருகிற ஒரு தெலுங்கன் இந்த கீர்த்தனங்களைத் திருத்தப் புகுந்தால் அக் கீர்த்தனங்களின் கதி என்னவாகுமென்பதை அறிவாளர்கள் எளிதில் யோசிக்கலாம். மேலும், அய்யரவர்களே கிராம்யமாய்ப் பாடினாரென்போமானால் அனேக கீர்த்தனங்களை சுத்த தேசியபாஷையில் இயற்றிய இவர், சில கீர்த்தனங்களை மாத்திரம் கிராம்யத்தி

வியற்றினாரென்பது எவ்வளவும் பொருந்தாது. அதுவு
மல்லாமல் யாதாமொரு ஸாஹித்யத்தை பாஷாபரிஞான
மில்லாத பலர் பலநாள் கையாடி வருவார்களே யானால்
அந்த ஸாஹித்யத்தில் எழுத்துப் பிழைகளோ அல்லது
பதப் பிழைகளோ உண்டாய் விடுகிற தென்பதற்குச் சந்
தேகமே யில்லை.

இது நிற்க புதிதாய்க் கீர்த்தனங்களைச் செய்து தியா
கய்யருடைய முத்திரையுடன் வெளியிடுகிற வியாபாரம்
அநேகருக்கு இருந்ததாகத் தெரிகிறது. இப்பொழுது
அய்யரவர்களின் கீர்த்தனைகளென்று வெளிவந்திருக்கிற
சுமார் எழுநூறு கீர்த்தனங்களில் சுமார் ஒருநூறு கீர்த்
தனம் அய்யரவர்களுடைய தல்லவென்று சிலர் அபிப்
பிராயப் படுகிறார்கள். மேலும் இதிற் கண்ட பிரஹ்லாத
சரித்திரம், நௌகா சரித்திரங்களும் அய்யரவர்களுடைய
தல்லவென்று சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் இந்த
சரித்திரங்களில் ஆங்காங்கு அய்யரவர்களின் கீர்த்தனங்
கள் சிலவற்றை எடுத்தெழுதி யிருப்பதும் வெளிப்படை
யாய் விளங்குகின்றது.

'ஈதி$^{V}$னமே ஸுதி$^{V}$னமு' 'நாததநும்' 'எவரநி நிர்ண
யிச்சிரிரா' முதலிய பல கீர்த்தனங்கள் அய்யரவர்களு
டைய தல்ல. 'எவரநி நிர்ணயிச்சிரிரா' என்னும் கீர்த்த
னத்தில் அஷ்டாக்ஷரத்தின் இரண்டாவ தெழுத்தாகிய (ரா)
என்னு மெழுத்தையும், பஞ்சாக்ஷரத்தின் இரண்டாவ
தெழுத்தாகிய (ம) என்னு மெழுத்தையுங் கூட்ட 'ராம'
என்னும் தாரகம் விளங்கிய தென்று சொல்லப்படுகிறது.
இந்த அபிப்பிராயம் வேதோக்தமு மல்ல, புராணோக்தமு
மல்ல. இப்பால் உண்டாகிய யாருடையதோ ஓர் விசித்ர

கல்பனம். மேலும் இஃது பூர்வாசாரியர்களாய் விளங்கு கிற சைவ வைஷ்ணவ சமயத்தவர்களில் யாருடைய கருத்துமல்ல. இப்படி அசம்பாவிதமாய் முன் னூல்களைத் தழுவாத ஒரு கீர்த்தனத்தையாவது அய்யரவர்கள் எழு தியதாகச் சொல்ல சாத்தியப்படாது.

இது நிற்க பூர்வாசாரியர்களாய் விளங்கின சைவ வைஷ்ணவ மதாசாரியர்கள் அவரவர்களின் கொள்கைப் படி சிவனுக்கோ அல்லது விஷ்ணுவிற்கோ ஒருவனுக்குப் பரத்வத்தைக் கொடுத்தார்களே யொழிய இருவருக்கும் ஏககாலத்தில் பரத்வத்தைக்கொடுத்ததாகத்தெரியவில்லை. ஈஸ்வர த்வித்வம் உண்டாகும் என்னும் பயத்தினல் பரத் வம் ஒருவனுக்கே கொடுக்கப்படவேண்டும். இரண்டு பரம்பொருள் உண்டென்று சொல்ல எச்சமயமும் உடன் படாது. அய்யரோ வென்றல் சில கீர்த்தனங்களில் சிவ னுக்கும் பல கீர்த்தனங்களில் விஷ்ணுவிற்கும் பரத்வ முண் டென்று சொல்லுகிறர். இவ் விரண்டில் ஒன்றை விலக்கின லல்லாது இவரது சமயம் இன்ன சமயம் என்று சொல்ல வியலாது. தாரக மந்திர உபதேசம்பெற்று ஒருநூறு கோடி இராமநாமத்தை யுருவேற்றி ஸ்ரீராமனுடைய கிரு பைக்குப் பாத்திரமா யிருந்த இவர், விஷ்ணு பக்தரா அல்லது சிவ பக்தரா? மேலும் இவரது 'பா^vலகனகமய' என்னும் கீர்த்தனையிலுள்ள 'ராஜத^vரநுத' என்னும் பிர யோகத்தினும், 'நீவேரா குலத^vநமு' 'ராம நீஸமாநமு' 'எம்தராநி' என்கிற பல கீர்த்தனங்களினும் முடிவாய் 'இதர தைவமுல வல்ல நிலநு ஸௌக்கியமா' என்கிற கீர்த்தனையினும் இவர் விஷ்ணுபக்தரென்று யூகிக்க இட முண்டாகிறது. ஆயிரக் கணக்கான கீர்த்தனங்களை விஷ்ணு

பரமாய்ப் பாடி, சில கீர்த்தனங்களை மாத்திரம் சிவபரமாய்ப் பாடியிருக்கமாட்டாரென்றும், மற்றும் சில காரணங்களைக் கொண்டும் இத்தொகுதியிற் கண்ட சிவபரமான கீர்த்தனைகள் அய்யரவர்களுடைய தல்லவென்றும் சிலர் சித்தாந்தம் செய்கிறார்கள்.

மேற்கூறிய காரணங்களால் அய்யரவர்களின் அங்கிதத்தை யுடைய பல கீர்த்தனங்கள் இத்தொகுதியில் கூடியிருக்கலா மென்று நம்புவதற்கு இடம் உண்டாயிருக்கிறது. மேலும் இத்தொகுதியில் சில கீர்த்தனங்களை நன்ருய்க் கவனிப்போமானல் அவை வெரும்பதங்களினல் மாத்திரம் முடையப்பட்டு எள்ளளவும் ரஸபாவமில்லாமல் வெரும் கூடையாய்க் காணப்படுகிறது. இவ்வாறிருக்கிற பல கீர்த்தனங்களையும், அதிலுபயோகிக்கப்பட் டிருக்கிற கிராம்பங்களையும் அய்யருடையதாய்க் கொண்டு அவரது உத்தம வாக்கேயகாரகத்வத்திற்கு குறைகூறப் புகுவது எவ்வளவும் தகாத காரியமேயாகும். ஆகையால் இந்தப் பதிப்பில் நான் பல பூர்வ பாடங்களை முன்னிட்டு கீர்த்தனங்களைச் சுத்தமாய்த் திருத்தி இருக்கின்றேன்.

கே. வி. எஸ்.

ஸ்ரீ

# த்யாகராஜஸ்வாமி சரித்திரம்

---

எல்லா வளங்களுக்கும் தாயமாய் விளங்கும் சோழ
மண்டலத்தில் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த திருவாரூரில்
சற்றேறக்குறைய இருநூற்றறுபது ஆண்டுகளுக்குமுன்
கிரிராஜகவி என்னும் ஓர் த்ரிலிங்கபிராமணர் இருந்தனர்.
அவருக்கு ஐந்து ஆண்பிள்ளைகள் பிறந்தனர். அவர்களுள்
கடைச் சிறுவனுக்கு இராமப்ரும்மம் என்று பெயர். அவர்
வேதசாஸ்த்திரங்களை நன்கு பயின்றவராய் அறம்வழுவாது
இல்லறம் நடத்திவந்த நாட்களில் இவர்க்கு மூன்று ஆண்
பிள்ளைகள் பிறந்தனர்கள். அவர்கட்கு முறையே பஞ்சாபி
கேசன், இராமநாதன், த்யாகராஜனென்று பெயரிட்டனர்.
இராம ப்ரும்மம் என்பவர் நாளடைவில் வறுமையின்
கொடுமையால் பீடிக்கப்பட்டவராய் தான் இதுவரையி
லும் வசித்துவந்த திருவாரூரைவிட்டு கும்பகோணத்திற்
கருகாமையி லிருக்கும் பஞ்சநதம் என்னும் திருவையாற்
றையடைந்து தனது நற்குண நற்செய்கைகளையே தனக்கு
உயிற்றுணையாகக்கொண்டு உஞ்சவ்ருத்தி செய்து மிகுந்த
கஷ்டத்துடன் குடும்ப ஸம்ரக்ஷணை செய்துவரும் நாளில்
இவரது மூத்த குமாரர்களான பஞ்சாபிகேசனும் இராம
நாதனும் ஸ்வல்ப சம்பளமுள்ள லௌகீக வ்ருத்தியில்

அமர்ந்தனர்கள். மூன்றாவது குமாரனாகிய தியாகராஜன் தன் தாய் தந்தையர்கட்கு பணிவிடை செய்வதிலேயே மிகுந்த ஊக்கமுடையவனாய் அவர்களது மனங்கோணாது நடந்து அவர்களது அநுக்கிரஹத்தைப் பெற்று தன் தந்தையைப்போல் வேதசாஸ்திரங்களில் நன்கு பயின்று தனது நல்லொழுக்கத்தின் மிகுதியால் யாவரும் கொண்டாடத் தகுந்தவனாய் விளங்கினான். அச் சிறுவனேயாகும் நமது தியாகராஜ ஸ்வாமிகள். பிறகு தியாகராஜஸ்வாமிகள் ஸங்கீத சாஸ்த்திரத்திலும் நான்கு பயிலவேண்டுமென்கிற எண்ணமுடையவராய் தான் வாஸம்செய்துவந்த வீதியிலேயே வசித்துவந்த தஞ்சைமாநகரத்தி ஸமஸ்தான வித்வானாய் விளங்கின ஸொண்டி வேங்கட சுப்பய்யரின் குமாரரான ஸொண்டி வேங்கடரமணய்யரிடத்தில் ஸங்கீத சாஸ்த்திரத்தைப் படிக்கத்தொடங்கினார். இதற்கு முன்னமே ஸங்கீதத்தின் லக்ஷிய ஞானத்தை ஒருவாறு பெற்றிருந்த அய்யரவர்கள் ஒருவருட காலத்திற்குள் ஏக ஸந்தக்கிராஹியாய் லக்ஷ்யலக்ஷணங்களுடன் ஸங்கீத சாஸ்த்திரத்தை கரதலாமலகமாய்ப் பயின்றார். இராகாலாபனம் செய்வதிலும், பல்லவி முதலியவற்றைப் பாடுவதிலும் நூதன கல்பனங்களுடன் போஷித்துப் பாடுவதிலும், இலக்கணப் பிழையின்றி பாடுவதிலும் அய்யரவர்கட்குச் சமானமாய் வேறொரு வித்வான் இவ்வுலகிலேயே கிடையாதென்று யாவரும் கொண்டாடத் தக்கவராய் ஸ்வாமிகள் விளங்கினார்.

இப்படி யிருக்கிற நாளில் காஞ்சிபுரத்திலிருந்து ஒரு பாகவதோத்தமர், பிரமனது சட்டளையை முன்னிட்டு திருவையாற்றிற் கெழுந்தருளி அய்யரவர்கட்கு தரிசனம்

தந்தருளினர். அப்பொழுது அய்யரவர்கட்கு அந்த பாகவ தோத்தமரையே ஞானசார்யனுப் பெறவேண்டு மென் கிற எண்ண முதித்தது. அக்கருத்தை பாகவதோத்தம ருணர்ந்து அய்யரவர்கட்கு தாரக மந்திரமாகிய ஸ்ரீராம நாமத்தை யுபதேசம் செய்தருளி, இந்த தாரக மந்திரத்தைத் தொண்ணூற்றுறுகோடி ஜபம் செய்கிறவன் ஜீவன்முக்த னுய் விடுவானென்றும் தெரிவித்துச் சென்றனர்.

அய்யரவர்களின் பதினுன்காவது வயதில் இவரது தந்தையாகிய ராம ப்ருஹ்மமும், அதற் கடுத்த வருடத்தி லேயே அய்யரவர்களின் தாயாகிய சாந்தை யம்மையும் லோகாந்தரத்தை யடைந்தனர். அய்யரவர்களின் தம யன்மா ரிருவரும் லௌகிக வ்ருத்தியி லிருந்தபடியால் தமது வீட்டைச்சார்ந்த வைதிக வியாபாரங்களை எல்லாம் அய்யரவர்களே நடத்திவந்தார். தமது பிதா மஹனுகிய கிரிராஜகவியும், பிதாவாகிய ராம ப்ரஹ்மமும் வெகுகால மாய் ஆராதித்து வந்த தமது குலதனமாகிய ஸ்ரீ ஸீதா ராம லக்ஷ்மண விக்கிரஹங்களை தனது தகப்பனுர் காலஞ் சென்றதுமுதல் தாமே பரமபக்தியோடு ஆராதித்து வந்த னர். அய்யரவர்கட்கு ஸ்ரீராமனை யாராதிப்பதிலும் மேலான வேறொரு காரிய மிருந்ததாகத் தெரியவில்லை. இவர் பாகவ தோத்தமரிடத்து இராமநாம உபதேசம் பெற்றபொழுது இவருக்கு வயது பதினறு கடந்தது. அதுமுதல் இராம னது ஸன்னிதானத்திலேயே இருபத்தோரு வருடகாலம் நாளொன்றுக்கு 125000 வீதம் தாரகமந்திரத்தை ஜபித்து தமது 38-வது வயதில் தொண்ணூற்றுறுகோடி நாமங்களை பூர்த்தி செய்தனர். இதன்பிறகு ஒருதினம், தான் இராம னுடைய ஸன்னிதானத்தில் தாரக மந்திரத்தை ஜபம் செய்

துக்கொண்டிருக்கையில் யாரோ வாயிற் கதவைத் தட்டின சப்தம் கேட்க அய்யரவர்கள் வந்து கதவைத் திறந்த பொழுது ஸ்ரீராமபிரான் விஸ்வாமித்திரரின் யாக ஸம்ரக்ஷணார்த்தமாய் தனது தம்பியுடன் யெழுந்தருளிய திருக்கோலமாய் அய்யரவர்கட்கு ஸேவை தந்தருளி அந்தர்த்தானமாயினர். உடனே ஸ்ரீராமனது அருட்சுரப்பினாலும் தமது அன்புப் பெருக்கினாலும் அய்யரவர்கட்கு அபராயத்தினமாய் வாசாமகோசரமாய் பகவத்குணாநுபவமாய் கீர்த்தனங்களைச் செய்யும் சக்தி யுண்டாயிற்று.

உடனே அய்யரவர்கள் அடாணாராகத்தில் ¶ 'எல நீத^v யராது^v' என்னும் கீர்த்தனத்தைப் பாடினார். இந்த கீர்த்தனம் தான் அய்யரவர்களால் முதற்முதற் செய்யப்பட்டது. இக் கீர்த்தனத்தில் அடாணா ராகம் அமைந்திருப்பதையும், பாஷையின் நடையழகையும் பாவபுஷ்டி

---

¶ இங்கு ஆந்திரபாஷையில், ஸ்ரீராமரது கல்யாணகுணங்களை இருபத்து நான்காயிர கீர்த்தனங்களில் புகழ்ந்து பாடவேண்டுமென்று நிச்சயித்து, ஆரம்பத்தில், 'கி^vரிராஜ ஸுதா தநய' என்னும் கீர்த்தநத்தினால்,விக்கிநேசுவரரைத் துதிசெய்து, பிறகு மற்றவைகளைப் பாடினாரென்பது சிலர் கொள்கை. எள்ளளவும் ஸ்வார்த்த ஸங்கல்பமில்லாமல் ஸ்ரீராமபிரானுடைய அநுக்ரஹத்தை தாமே நேரில்பெற்று அப்பொழுதே கீர்த்தனம்பாட வாரம்பித்த இவர் ஸங்கல்பபூர்வமாய் கிரந்தங்களை எழுதுபவர்களைப் போல், 'கி^vரிராஜ ஸுதா^v தநய' என்னும் கீர்த்தனத்தை முதற் முதற் பாடினாரென்னும் புராணம் எத்துணையும் பொருந்தா தென்பது உணரத் தக்கது.

யையும் அவ்வூரில் அக்காலத்தில் பண்டிதரத்னங்களாய் விளங்கின ப்ருமஸ்ரீ ராமசேஷ சாஸ்திரிகள், பாஷ்யம் க்ருஷ்ணசாஸ்திரிகள் முதலியவித்வான்கள்பார்த்து, இவன் கானத்தில் கந்தர்வனும், ஞானத்தில் நாரதனுமே யாவனென்று அய்யரவர்களைக்கொண்டாடினார்கள். பிறகு அய்யரவர்கள், 'ராமா நின்னே நம்மினானு' என்னும் கீர்த்தனத்தை உஸேநிராகத்தில் பாடினர். பிறகு ஸீதாலக்ஷ்மணாதி பரிவாரங்களுடன் தமது கிருஹத்தில் ஸேவை தந்தருளுகிற இராமசந்திர மூர்த்தியினுடைய ஸன்னிதியில் நின்று தனக்கு இராமபிரான் ஸேவை தந்தருளியதை நினைந்து நினைந்துருகி, 'நின்னேப$^{v}$ஜந' 'கத்த$^{v}$நுவாரிகி' 'எம்தமுக$^{v}$தூ$^{v}$' 'முத்$^{v}$து$^{v}$மோமு' 'ஸ்ரீராமஜயராம' என்று பலகீர்த்தனங்களைப் பாடினர்.

அய்யரவர்கள் தமது கிருஹத்தில் ஓர் பெரிய கூடத்தில் ஸ்ரீஸீதாராம ஆஞ்சநேய விக்ரஹங்களை யலங்கரித்து 'உபசாரமுலநு சே கொனவையா' என்று பாடி விதிப்படி த்ரிகாலபூசை செய்து நித்யோத்ஸவ, பக்ஷோத்ஸவ, மாஹோத்ஸவங்களைத் தவறாது நடத்தி வருவதுடன் அந்தந்த ஸமயங்கட்குத் தக்கபடி இனிய கீர்த்தனங்களைப் பாடி ஸ்ரீராமனை யுபசரித்துவருவார். இவ்வண்ணம் இடைவிடாது நடத்தப்பட்டுவரும் உத்ஸவ வைபவத்தைப் பார்க்கவும், அய்யரவர்களின் இனிய ஸங்கீதத்தைக் கேட்கவும் அவ்வூரிலுள்ளார் பலரும் வந்து அங்கு கூடுவது வழக்கமாயிற்று. நாளடைவில் அய்யரவர்களின் பெருமையைச் சொல்லக்கேட்டு தூரதேசங்களி னின்றும் பக்தகோடிகள் அய்யரவர்களை தரிசிக்கும் நிமித்தமாய் திருவையாற்றிற்கு வரவாரம்பித்தனர். இவ்வாறு அய்யரவர்க

வின் பெருமை நாளுக்குநாள் பிரபலித்து வருவதைக் கண்டு அவ்வூரிலுள்ள சில துரபிமானிகள் பொறாமை கொண்டு அய்யரவர்களின் பேரில் குறைகூறி யிகழ்ந்து பேச வாரம்பித்தனர்கள். இதைச் செவியுற்ற அய்யரவர்கள் மனந்தாளாது இராமனுடைய ஸன்னிதியில் நின்று, 'ஐய்யநே பக்தி எனும் கந்தமே இல்லாத பாமரர்கள் ஸமுகத்தில் என்னை விடுத்து பரிஹஸிப்பித்து வேடிக்கை பார்க்கின்றனையோ! என்று 'தொலிநே ஜேஸின' 'நே மொர பெட்டிதே' 'நே பொகடு^v^கும்டே.' முதலிய கீர்த்தனங்களைப் பாடினர். சில ஸங்கீதம் பாடுகிறவர்கள் அவ்வூரில் ஒன்றுகூடி அய்யரவர்களின் திவ்ய கானத்தைக் கேட்டு மனம் பொறுது அய்யரவர்கட்கு ஸங்கீதத்தில் லக்ஷியஞானம் மாத்திரமே யல்லாது லக்ஷண ஞானமில்லை என்றும், இவருக்கு ஸ்வரஞானம் கிடையாதென்றும், வர்ணாலங்காரமாய் கல்பனம் செய்வது இவருக்கு சாத்தியமாகா தென்றும் சொல்லி வருவதைக் கேட்ட அய்யரவர்கள், 'ஸங்கீதஞானமு ப^v^க்திவினா' என்ற கீர்த்தனையைப் பாடி பிறகு ஸ்வர ஸாஹித்ய ரூபமாய்க் கீர்த்தனங்கள் செய்ய நினைத்து 'ஜக^v^தா^v^நந்த^v^காரக' என்னும் கீர்த்தனையை எழுதி பிறகு தான் அபராதிபாகாவண்ணம் 'து^v^டுகு க^v^ல' என்னும் கீர்த்தனையையும் பாடினர். இவ்விரண்டு கீர்த்தனமும் அய்யரவர்களின் பஞ்சரத்தினத்தைச் சேர்ந்தவைகளாம்.

ஒருநாள் அதிகாலையில் அய்யரவர்கள் அப்பஞ்ஜந ஸ்நானம் செய்யவேண்டுமென்று எண்ணை எடுத்து தலையில் தேய்த்துக் கொண்டிருக்கும்பொழுது திடீரென்று யாரோ ஒரு சன்னியாசி இவருடைய வீட்டிற்குள் நுழை

ந்து இவரைநோக்கி; "ஐயா! தியாகராஜனென்று யாரோ ஒரு ஸங்கீதவித்வான் இவ்விட மிருப்பதாகக் கேள்விப் பட்டு அவருடைய ஸங்கீதத்தைக் கொஞ்சம் சிரவணம் செய்யவேண்டு மென்கிற ஆவலுடையவனுய் வந்தேன்" என்றனர். அப்பொழுது அய்யரவர்கள் அந்த சந்யாசியை யுபசரித்து ஆஸனத்திருத்தி 'அய்யா! தாங்கள் கௌரவப் படுத்த வந்த அந்த தியாகராஜன் அடியேனே யாகும், உத்திரவு கொடுத்தால் என்னுலியன்ற வரையில் கானம் செய்கிறே' னென்று அச் சன்யாசியின் உத்திரவைப் பெற்று ஒரு முகூர்த்தகாலம் கந்தர்வனும் நாணும்படியாய் அமிருத தாரையாய் கானம் செய்தார். அந்த கானத் தைக் கேட்டு எதிஸ்வரர் மிகுந்த ஸந்தோஷமடைந்து அய்யரவர்களை நோக்கி, 'அப்பனே! உன்னுடைய திவ்ய கானத்தைக் கேட்டு யான் மிகுதியும் ஆனந்தமடைந்தேன்; உனக்குச் சமானமாய் கானஞ் செய்யக்கூடியவன் இப்பூ மண்டலத்தி லொருவனில்லை' என்று சொல்லி தம்மிடத் திருந்த ஒரு புத்தகத்தை எடுத்து அய்யரவர்களிடம் கொடுத்துத் தாம் சென்று அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு பிக்ஷைக்கு அய்யரவர்களுடைய வீட்டிற்கே வருவதாய்ச் சொல்லிவிட்டுச் சென்றனர். அனுஷ்டானத் துக் சென்ற எதிஸ்வரரை பிக்ஷைக்கு எதிர் பார்த்துக் கொண்டிருந்த அய்யரோ வென்றால் காலாதீதமாகியும் வராமலிருக்கிற எதிச்வரரை ஊரெங்கும் தேடியும் காணு மல் மனம்வாடி அன்று முழுதும் அன்னமில்லாமல் உப வாஸமாய் சாயங்காலம் ஸ்ரீராம கைங்கர்யங்களை எல்லாம் செய்து முடித்து ராத்திரி நித்திரை செய்து கொண்டிருந் தார். அப்பொழுது அய்யரவர்களின் கனவில் அந்த எதிச்

வரர் தோன்றி, 'அப்பனே! நான் நாரதன்; உன்னுடைய பக்தி ஞானம் வைராக்யம் சீலம் முதலியவற்றிற்கு கட்டுப்பட்டவனாய் உன் வீட்டிற்குவந்து உனக்கு தரிசினம் தந்தேன்; உன் கானத்தையும் கேட்டு ஆனந்தமடைந்தேன்; நான் உன்னிடத்தில் கொடுத்திருக்கும் புத்தகத்திற்கு, 'ஸ்வரார்ணவம்' என்று பெயர். அது மிகவும் அருமையான ஓர் ஸங்கீத கிரந்தம். இந்த கிரந்தத்திலுள்ள விஷயங்களை யறியும் திறமை உன்னிடத் தல்லாது வேரிடத்திருப்பதாகத் தெரியவில்லை; இப் புத்தகத்தை நீ உதவியாய்க்கொண்டு ஸங்கீத சாஸ்த்திரத்தை உலகின்கண் புநருத்தாரணம்செய்வாயாக' என்று சொல்லி மறைந்தனர். பிறகு அய்யரவர்கள் நித்திரை தெளிந்து எதீச்வரரால் தனக்களிக்கப்பட்ட புத்தகத்தைப் பார்க்க அது ஸ்வரார்ணவமாய் இருக்கக் கண்டு ஆச்சரிய மடைந்து தன்னிடத்துக் கருணை கூர்ந்தவர் லோகாசாரிய னாகிய நாரதமுனிவனே என்றுணர்ந்து அவரை, 'ஸ்ரீநாரத$^{V}$' 'நாரத$^{V}$கா$^{V}$ன' 'வரநாரத$^{V}$' முதலிய பல கீர்த்தனங்களால் பாடி யேற்றியருளினர்.

நாரதர் தந்தருளிய அப் புத்தகத்தினாலேயே த்யாகராஜருக்கு ஸங்கீத ஸாஹித்தியங்களில் நிபுணத்துவம் அதிகம் உண்டாயிற்று. பின்பு, 'ஸீதாவர' 'ஸ்வரராக ஸுதா$^{V}$ரஸ' 'கீதார்த்தமு' 'ஸங்கீ$^{V}$த ஶாஸ்த்ர' 'நாதோ பா$^{V}$ஸந' 'ஆனந்த$^{V}$ ஸாக$^{V}$ரமே' 'ஶோபி$^{V}$ல்லு' 'ராக$^{V}$ஸுதா$^{V}$ரஸ' என்னும் கீர்த்தனங்களால் ஸங்கீதத்தைக் கொண்டாடி, ஸ்ரீராமமூர்த்தியை மறுபடியும் பிரத்யக்ஷமாய்த் தரிசிக்க வேண்டும் என்று, 'எந்நடு$^{V}$ஜூதுநோ' 'விநயமுநநு' என்னும் இத்தகைய கீர்த்தநங்களால் தம் மனத்தையடக்கி,

'வினவே ஓ மநஸா' 'உண்டேதி' 'மநஸா ஸ்ரீராமசந்த் ருநி' 'மறவகுரா' 'பரலோக ஸாதனமே' 'பஜரே பஜ மாநஸ' 'தெலிஸிராம' 'கட்தேற ராதா' 'பஜநஸேய ராதா' 'பஜநஸேயவே' 'சக்கநி ராஜமார்கமு' என்பன போன்ற பல கீர்த்தனைகளைப் பாடினர்.

இவ்வாறு ராம பஜனத்தினால் உண்டாகும் மேன்மையைச் சிறப்பித்து, 'அப்ப ராமபக்தி' 'பதவி நீஸத்பக்தி' 'நாம குஸுமமுலசே' 'எடுலேநா' 'பக்திபிக்ஷ' 'ராம பக்தி ஸாம்ராஜ்யமு' 'ஸ்மரணே ஸுகமு' என்னும் கீர்த்தனங்களினால் புகழ்ந்து, 'தெலியலேரு' 'நடசிநடசி' 'எமிஜேஸிநநேமி' 'ராமா நீபெட' 'நிஜமுக நீ' 'நீ பஜந கான' 'கலிநருலகு' என்னும் கீர்த்தனங்களால், பக்தி ரஸத்தையறியாத மனிதரை நிந்தித்து பரிதாபமடைந்தனர்.

பிரதிதினமும் ராத்திரியில் தாம் படுக்கைக்குப் போகுமுன் பழம், பால், தாம்பூலங்களை ஸ்ரீராமர் சந்நிதியில் வைத்து உபசாரங்களோடு, 'ஆரகிம்பவே' 'விடெமுஸேயவே' எனப் படுக்கைக் கீர்த்தனங்களைப்பாடி திரைமூடிச் சயனத்திற்குப் போவார். உதய காலத்தில் எழுந்து திரை நீக்கிப் பார்த்தபொழுது, பாதியளவு பாலும், பாதியளவு பழமும் மிகுந்திருக்கும். தாம்பூலத்தை மென்று உருண்டையாய்ப் படிகத்தில் உமியப்பட்டிருக்கும். இவ்வகையாக ஸ்ரீராமரால் அருளப்பெற்ற பிரசாதத்தை மிகப் பரிசுத்தமானதென்று உட்கொண்டு, 'ராம நீஸமாந' 'மேருஸமாந' 'கருணா ஸமுத்ரா' 'பவநுத' 'மோஹநராமா' 'காருவேல்புலு' 'எந்து கௌகலிம்துரா' 'சேதுலாரா' 'துளஸீ

தளமுலசே' 'துளஸீபில்வ' என்னும் கீர்த்தநங்களைப் பாடினர்.

ஏகாதசிபுண்ணிய காலங்கடோறும் தாம் உபவாசமிருந்து இராத்திரியில் ஸ்ரீராமருக்கு உற்சவம் நடத்தும் போது பாடும், 'ஸ்ரீபதே' 'ரமிம்சுவாரு' 'நெநருஞ்சிநாநு' 'நிநுவிநா நாமதிந்து' 'நகுமோமு' 'தாஸரதே, தயாஸரதே,' 'ஏராமுநி தல்லிதண்ட்ருலு' 'மனவிநி விநுமா' 'மறசெடு வாடநா' 'ராமா நீபை' 'விந நாஸ' 'லோகாநந' என்னும் கீர்த்தநங்களின் ஸங்கங்களைச் சொல்லத் தரமல்ல. பிருந்தாவன துவாதசிதினத்தில் துளசியம்மைக்கு பூஜைசெய்து, 'தேவி ஸ்ரீ துளஸம்ம' 'அம்ம ராவம்ம' 'துளஸம்ம' 'துளஸீ ஜகஜ்ஜநநீ' எனப் பற்பல கீர்த்தநங்களைப் பாடுவ்வார்.

இப்படி நிகழ்ந்துவரும் நாளில் கேரளதேசத்தைச் சார்ந்த திருவனந்தபுரமென்னும் நகரத்தில் யாதவகுலத்திற் பிறந்தவரும், ஞான வைராக்ய பக்திமுதலியவற்றிற் சிறந்தவரும் ஸங்கீதத்தில் மிகத் தேர்ந்தவருமான ஷட்கால கோவிந்ததாஸரென்னும் ஒரு மஹான் இருந்தார். ஒருநாள் இவரது ஸ்வப்னத்தில் ஸ்ரீராமபிரான் தோன்றி 'ஹே கோவிந்த! திருவையாரென்னும் பஞ்சநத க்ஷேத்திரத்தில் ஸங்கீத சாஸ்திரத்தில் கரைகண்டவனும், பக்தியில் மிகுந்தவனுமாகிய தியாகராஜன் என்னும் என்னுடைய பரமபக்தன் வாசம் செய்து வருகிறான்; நீ அவ்விடம் சென்று அவனை தரிசித்து வருவாயாக' என்று கட்டளையிட்டுச் சென்றனர். உடனே கோவிந்ததாஸர் திருவையாற்றிற்குப் புறப்பட்டு வந்து அய்யரவர்களை தரிசித்துத் தான் அய்யரவர்களே ப்ரமிக்கும்படியாய் கானம்.

செய்து, அய்யரவர்களின் கானத்தையும் தான் கேட்க வேண்டுமென்று தன் கோரிக்கையைத் தெரிவித்தார். அய்யரவர்கள் உடனே அதற்கிணங்கி ஒரு முகூர்த்தகாலம் கந்தர்வகானமோ வென்னும்படி அத்புதமாய்ப் பாடினர். அந்த கானத்தைக் கேட்ட கோவிந்ததாஸர் உளம் பூரித்து பரமானந்த மடைந்து அய்ய ரவர்களையும் அங்கு வந்திருந்த பெரியோர்களையும் நமஸ்கரித்துத் தான் திருவனந்தபுரத்தில் கண்ட ஸ்வப்னத்தையும் அவர்களுக்குத் தெரியப்படுத்தி அய்யரவர்கள் ஸாமான்ய புருட ரல்லவென்றும், பக்தி, ஞானம், வைராக்ய முதலியவு எல்லாவற்றையும் ஸங்கீத சாஸ்திரத்தையும் நிலைநாட்டும் பொருட்டு உலகின்கண் அவதரித்த வால்மீகியி னுடைய அம்சமே என்றும் கொண்டாடி, அய்யரவரிடம் விடைபெற்று ஸ்ரீபாண்டுரங்கனைச் சேவிக்கும்பொருட்டாய்ப் பண்டரிபுரம் சென்றனர்.

இப்பால் சில காலைக்கெல்லாம் கங்காநதீ தீரத்தில் வாஸம் செய்துவந்த இராமதாஸன் என்னும் ஓர் பக்த காயக சிகாமணியின் ஸ்வப்னத்திலும் ஸ்ரீராமசந்திர மூர்த்தி தோன்றி திருவையாற்றில் அய்யரவர்களை தரிசிக்கும்படிக்குக் கட்டளையிட் டருளினர். அதுபோலவே இராமதாஸரும் திருவையாற்றிற்கு வந்து அய்யரவாகளை தரிசித்து அவருக்குத் தமது கானத்தைக் கேட்பித்து தனது ஸ்வப்னத்தையும் யாவரும் கேட்கும்படியாய் பஹிரங்கமாய் வெளியிட்டார். இப்படி ஒருதரத்துக்குப் பலதரமாய் இராமபக்தர்கள் தன்னிடத்திற்கு ஸ்ரீராமனாலேயே அனுப்பப்படுவதை யுணர்ந்த அய்யரவர்கள் மனமுருகி, ஏந்த³ரோ மஹாநுபா⁴வுலு அந்த³ரிகி வந்த³னமு' 'விது⁴

ஙுக ம்ரொக்கெத[V]' என்னும் கீர்த்தனைகளால் இராமபக்தர்களனைவரையும் தொழுது பிறகு ஸ்ரீராமபிரானை தியானம்செய்து, "ஐயனே! இந்த ஏழையினிடத்து இவ்வளவு பெருங்கருணை கூர்ந்த உனக்கு நான் கைம்மாறு செய்யவல்லேனோ! என்றுருகி 'தா[V]சரதே[V] நீருணமு தீ[V]ர்ப்ப நாதரமா' என்கிற கீர்த்தனத்தைப் பாடி ஆனந்தித்தனர்.

தெய்வத்தன்மை வாய்ந்த அய்யரவர்களின் பெருமையைப் பலர் கொண்டாடிச் சொல்லக் கேட்ட மைசூர், தஞ்சாவூர் முதலிய தேசாதிபதிகள் அய்யரவர்களைத் தமது சபைக்கு வரவேண்டுமென்று பல தடவைகளில் பத்திரிகைகளின் மூலமாய் ஆஹ்வானம் செய்தும் அய்யரவர்கள் தமக்கு இராகவனுடைய தய்வை யல்லாது வேறு தயவால் எத்துணையும் பயனில்லை என்று அவ் வாஹ்வானங்களை யசட்டைசெய்தார். இப்படி யிருக்கும்பொழுது ஒருதினம் தஞ்சை மாநகரத்தை யரசாண்டுவந்த சரபோஜி மகாராஜன் திருவையாற்றிற்கு வந்து அய்யரவர்களைத் தன்னிருப்பிடத்திற்குக் கூட்டிவருப்படிக்குத் தூதர்களை யனுப்பினான். அந்த ஆஹ்வானத்தையும் அய்யரவர்கள் உபேக்ஷை செய்து இராமனது ஸந்நிதானத்தை விட இந்த இராஜஸேவை எனக்குப் பெரிதல்ல என்னும் பொருள்பட, 'நிதி[V] சால ஸுக,மா' 'காஸிச்சுடயே[V]' என்னும் கீர்த்தனங்களைப் பாடி, 'இராம! என்னை இப்படி அன்னியர்கள் வந்து உபத்ரவிக்காதிருக்கும்படி அனுக்கிரஹிக்கப் படாதா' என்ற பொருள்பட வேறு சில கீர்த்தனங்களையும் பாடி முடித்தனர். இதைக் கேட்ட அவ்வரசன் இவர் பரமபக்தர் இவரிடத்தில் அபசாரப்பட்டால் அதுவொரு பெரிய வாபத்தாய் முடியுமென்று பயந்து தன் நகரம் சென்றான்.

இந்தவிஷயங்களை எல்லாம் நேரில் பார்த்துக்கொண்டிருந்த இவரது ஜேஷ்ட பிராதாக்களான பஞ்சாபிகேசனும் இராமநாதனும் பொருளாசையினால் ஆத்திரங் கொண்டவர்களாய், 'அந்தோ! நமது தம்பிக்கு அபாரமான யோக்யதை இருந்தும் திரவியம் சம்பாதிக்குந் திறமை எள்ளளவு மில்லாமற் போயிற்றே, நம் நாட்டரசனே நேரில் வந்திருந்தும் அவரை இவன் அலக்ஷியம் செய்தனனே. இரவும் பகலும் இந்த பட்டாபிஷேக விக்ரஹங்களைக் கட்டிக்கொண் டழுகிறானே. இந்த குடும்பத்தின் வறுமையை கொஞ்சமாவது கவனிக்கிறா னில்லையே? இவனால் இந்த வீட்டில் இரவும் பகலும் அமைதியில்லாத அமளி உண்டாகிறது. ஊரெல்லாம் ஒன்றுதிரண்டு இந்த வீட்டில் கும்பல் கூடுகிறார்கள். காப்பணத்திற்குக்கூட வழியில்லை. இந்த விக்ரஹங்கள் இந்த வீட்டிலிருக்கிற வரைக்கும் இந்த வீடு செவ்வைப்படாதென்று தீர்மானித்து பாதிராத்திரியில் அய்யரவர்களின் ஆராதனத்திருந்த விக்ரஹங்களை எடுத்து ஆற்றில் போட்டுவிட்டனர்.

அய்யரவர்கள் விடியற்காலையி லெழுந்து தரிசனார்த்தம் சென்று கண்டபொழுது தமதுயிரினும் சிறந்த விக்ரஹங்களைக் காணாது வருந்தி 'ஏபாபமு ஜேஸிதிரா' என்னும் கீர்த்தனத்தைப் பாடி தனது ஜ்யேஷ்டர்கள் தன்னை பக்தி செய்ய வொட்டாது உபத்திரவம் செய்கிறார்களே என்றும், என்னுடன் கூடி அவர்களும் பஜனை செய்யும்படி கடாக்ஷிக்கக் கூடாதாவென்றும் பொருள்பட 'நாமொராலகிம்பவேமி' என்னும் கீர்த்தனத்தையும் பாடி ராமனது பிரிவாற்றாமையால், 'அந்யாயமு ஸேயகுரா' 'நாயெட$^{v}$ வம்சந' 'மர்யாத$^{v}$ காது$^{v}$ரா' 'மரியாத$^{v}$ கா$^{v}$த$^{v}$ய்ய'

'ராகிதி$^{V}$ராது$^{V}$' 'எந்து$^{V}$தா$^{V}$கிநாடோ$^{V}$' 'எம்தராநி' 'சேரராவ தே$^{V}$மிரா' 'சலமேலரா' 'மரிமரிநின்நே' 'கொநியாடெ$^{V}$டு$^{V}$' 'மாருப$^{V}$ல்க' 'எமிதோவ' 'அபி$^{V}$மாநமு' 'ராமநந்நு' 'குல பி$^{V}$ருது$^{V}$நு' 'எமிநேரமு' 'நந்நுப்$^{V}$ரோவ' 'எந்து$^{V}$கு நிர் த$^{V}$ய' 'பாஹிராமசந்த்$^{V}$ர' 'வேறெவ்வரெ' 'ராமசந்த்$^{V}$ர நீத$^{V}$ய' 'ராம தெ$^{V}$ய்வமா' 'ஸார்வபௌ$^{V}$ம' 'எம்தவேடு$^{V}$ கொ$^{V}$ந்து$^{V}$' 'தனவாரிதநமு' 'மாடா$^{V}$டா$^{V}$வதே$^{V}$மி' 'ஸீதா பதி' 'ஸாக்ஷிலேத$^{V}$நுசு' 'காலஹரண' 'மதி$^{V}$லோந' 'ஆத$^{V}$ய ஸ்ரீரகு$^{V}$' 'த$^{V}$ரிதா$^{V}$புலேக' 'ப்$^{V}$ரோசுவா ரெவரெ' 'ராமாபிராம' 'த$^{V}$ண்டு$^{V}$மு பெ$^{V}$ட்டெத$^{V}$ரா' 'ப$^{V}$லுகவேமி' 'நாடி$^{V}$மாட' 'வத்$^{V}$த$^{V}$நே வாரு' 'லேமிதெ$^{V}$ல்ப' 'பா$^{V}$காய நைய' 'தநமீத$^{V}$நே' 'ஸ்ரீகாம்த' 'நீசித்தமு நாபா$^{V}$க்$^{V}$யமு' என்னுங் கீர்த்தநங்களைப்பாடி ஊணும் உறக்கமு மின்றி, பிரலாபித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் ஒருநாள் பகவான் இவரது கனவில் தோன்றி தாம் இருக்கும் இடத்தைத் தெரிவிக்க, காவேரியில் மணலைத் தோண்டித் தோண்டித் தேடிக்கொண்டு வந்தனர். ஒரு வருஷமானபிறகு நான்கு மூர்த்திகளும் அகப்பட்டனர். தக்ஷணமே, 'ராரா மாயிண்டிதா$^{V}$க' 'ரகு$^{V}$வீர ரணதீர' 'முத்$^{V}$து$^{V}$மோமு' 'அலக லல்லலாட$^{V}$' 'ஸ்ரீராம ஜபராம' 'கலிகி$^{V}$யும்டே$^{V}$' 'எபநிகோ' என்னுங் கீர்த்தநங்களைப்பாடி மஞ்சனமாட்டிக் கொலுவிருத்தி, 'எட்ட தொ$^{V}$ரிகிதிவோ' 'எந்த பாக்யமு' 'கொலுவை யுன்னாடே$^{V}$' 'கொலுவமரெ கதா' 'தொ$^{V}$ருகுனா இடுவம்டிஸேவ' முதலிய பலகீர்த்தனங்களைப் பாடி யேற்றினர்.

பிறகு, ஜப்யேசனுக்கும் இராமநாதனுக்கும் நற்புத்தி உண்டாக்கவேண்டுமென்று பகவானை பிரார்த்தித்த மாத்

திரத்தில், அவர்கட்கு நற்புத்தியுண்டாகி தம்மோடு கூடி ராமபஜனை செய்து வந்தனர்.

பிறகு த்பாகராஜர் தம் சிஷர்களுடன் திருப்பதி ஸ்தலத்தை யடைந்து அலர்மேன்மங்கை நாயகராகிய ஸ்ரீநிவாசப் பெருமாளை தரிசிக்கும் பொருட்டு ஆலயத்திற்குள் செல்ல, சந்நிதி திரை சமர்ப்பிக்கப்பட் டிருந்தது. அப்போது த்யாகராஜர், பெருமாளைத் தரிசிக்க இயலாமையால், தமது பாவமே திரையாக வந்து மறைக்கின்றதே யன்றி வேறில்லை என் றெண்ணி, 'தெரதீயக ராதா' என்னும் கீர்த்தனையைப் பாட, அத்திரை உடனே அறுந்து கீழே விழுந்தது. பிறகு அவர் வேங்கடேசனைத் தரிசித்து வணங்கி, 'வேங்கடேஶ' என்னும் கீர்த்தனையால் துதித்து, மீண்டு வருகையில் கோவூர் என்னும் சிவஸ்தலத்தில் வசித்திருந்த சுந்தரமுதலியா ரென்னும் பக்தர் இவர் வரவை முன்னுணர்ந்து எதிர்கொண்டழைக்க, அவ்விடத்தில் ஒருவாரம் தங்கியிருந்து; பிறகு அவ்வூரைவிட்டு புறப்படுகையில், பக்தரான சுந்தரேசமுதலியார் த்யாகராஜரது வைராக்கியத்தை யுணர்ந்து, இவர் நம்மிடத்து எதனையும் ஏற்றுக்கொள்ளார் என்று நிச்சயித்து, ரகஸியமாய் ஆயிரம் ரூபாய் அடங்கிய ஒரு பையை அவரது பல்லக்கிலுள்ள பெட்டியில்வைத்து, இதனைச் சிஷ்யர்களுக்குத் தெரிவித்து அனுப்பினர். விடியற்காலத்திலேயே அவர்கள் பல்லக்கைத் தூக்கிக்கொண்டு புறப்பட்டார்கள். இரண்டு புறங்களிலும் காடுநெருங்கிய வழியில் திருடர்கள் வில்லில் சிறு கற்களை வைத்து குறிபார்த்து பல்லக்கையடித்தனர்கள். பல்லக்கைச் சுமந்து செல்லும் சிஷ்யர்களும், பல்லக்கைச் சூழ்ந்து வரும் சிஷ்யர்களும் மிகவும் பயந்து, 'ஸ்வாமீ! திருடர்

வந்திருக்கிறார்கள் ; பயமாயிருக்கிறது, என்னசெய்வோம்' என்றனர். அதற்கு ஸற்குருவானவர், 'திருடர்கள் வந்தால் நமக்கென்ன பயம்? நம்மிடம் என்ன இருக்கிறது?' என்றனர். அதற்குச் சிஷர்கள், 'ஸ்வாமி! கோவூர் சுந்தரேசமுதலியார் ஆயிரம் ரூபாய் நிறைந்த ஒரு பையை இப் பல்லக்கின் பெட்டியில் வைத்திருக்கின்றார்' என்று சொல்லினர். தக்ஷணமே அவர் பல்லக்கை நிறுத்தி, பகவானை நினைத்து, 'முந்து[V]வெனுக' 'ரகு[V]வீர' என்னும் கீர்த்தனங்களைப் பாடினர். அப்போது ஸ்ரீ ராமலக்ஷ்மணர் பயங்கரமான சேவகர்களைப் போல் வேஷம் தரித்துக்கொண்டு, பல்லக்கின் இருபுறங்களிலும் நின்று அம்பு எய்தார்கள். அந்த அம்புகள் திருடர்மீதுபட்டு காயப்படுத்தின. ஆயினும் ஒருவருக்கும் பிராணாபத்து உண்டாகவில்லை. ஏனெனில், அவர்கள் த்யாகராஜருடைய கிருபைக்குப் பாத்திரரானபடியால் அவர்களைக் கொல்ல பகவானுக்கு இஷ்டமில்லை. திருடர்கள் சிறிது தூரம் சென்று பல்லக்கின் இருபுறங்களிலும் நிற்கும் சேவகர்களின் சவுந்தரியத்தையும் பராக்கிரமத்தையும் பார்த்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது சூர்யனும் தன் குல திலகரான ராமலக்ஷ்மணருக்கு பல்லக்கைக் காக்கும் சிரமத்தைத் தீர்ப்பான்போல கீழ்த்திசையில் உதயமானான். உடனே ராமலக்ஷ்மணர் மறைந்து போயினர். இவை யனைத்தும் த்யாகராஜருக்கும் அவரது சிஷ்யர்களுக்கும் தெரியாது. பின்பு, திருடர்கள் த்யாகராஜரைச் சமீபித்து, 'ஸ்வாமி! நாங்கள் திருடர்கள். தங்களிடம் திருடும் பொருட்டு வந்தோம். பல்லக்கின் இருபுறங்களிலும் நின்று எங்கள் மீது அம்பு எய்துவந்த இருவரும் எங்கே மறைந்து போயினரோ? அம்புகளால் எங்களைக்

க்காயப்படுத்திக்கொண்டிருந்தும், அவர்கள்மீது எங்களுக்குக் கோபம் உதிக்கவில்லை. அவர்களது சவுந்தரியத்தைப் பார்க்க மிகவும் ஆநந்தம் அதிகரித்துக் கொண்டிருந்தது. இந்த சேவகர்களை எங்கே சம்பாதித்துக்கொண்டீர்? இப்போது அவர்களை எங்கே அனுப்பினீர்கள்?' என்று கேட்டனர். அதைக்கேட்ட த்யாகராஜர் அப்படி வந்து காத்து மறைந்தவர்கள் ராமலக்ஷ்மணர்களாகவே இருக்க வேண்டும் என்று நிச்சயித்து, ஆநந்தக்கண்ணீர் பெருக திருடர்களைப் பார்த்து, "ஓ திருடர்களே! நீங்கள் கண்ட சேவகர்களை எங்களுக்குத் தயவுசெய்து காட்டுங்கள். இந்த ஆயிரம் ரூபாயையும் உங்களுக்கே கொடுத்துவிடுகிறேன்" என்று பல்லக்கிலிருந்த ரூபாய் மூட்டையைக் கீழே தள்ளினார். அவ்வளவில் திருடர்கள் ஆச்சரியமுற்று, "ஸ்வாமீ, சேவகர்கள் நின்றது தேவரீருக்குத் தெரியாதா? ஆயிரம் ரூபாயை எங்களுக்குக் கொடுத்து அவர்களைக் காட்டச் சொல்லுகிறீர்களே" என்று விண்ணப்பம் செய்ய, த்யாகராஜர், "ஓ திருடர்களே! எங்கள் குலதெய்வங்களான ராமலக்ஷ்மணர்களைக் கண்ணாரக்கண்ட உங்கள் பாக்கியமே பாக்கியம். முற்பிறப்பில் என்ன தவம் செய்தீர்களோ! உங்களுக்கு ராமலக்ஷ்மணர் பிரத்தியட்சமாயினர். மகா பாவியான எனக்கு அவர்களுடைய தரிசனம் கிடைக்கவில்லையே" என்று மிகவும் துக்கித்துக் கண்ணீர்விட்டு, 'ராமராம' 'எவரிச்சிரி' 'வாசாம கோசரமே' என்ற கீர்த்தனங்களைப் பாடினர். ராம லக்ஷ்மணர்களைத் தரிசித்தமையாலும் பாகவதரது கடாக்ஷத்தினாலும் திருடர்கள் தமது திருட்டுத் தொழிலைக் கைவிட்டு, அன்றுமுதல் ஸ்ரீராம பக்தர்களாய், த்யாகராஜரது சரணத்தை யடைந்து, அவ

ரது பல்லக்கைச் சுமந்துகொண்டு காட்டின் வழிபாய் வரும்போது மத்தியில் ஒரு அக்ரஹாரத்தை யடைந்தனர். அங்கிருந்த கோயில் வாயிற்படியில் ஜனங்கள் கூட்டமாயிருந்தனர். த்யாகராஜர் தம் சிஷரைக் கூப்பிட்டு, "என்ன கூட்டம்" என்று விசாரிக்கச் சொன்னர். அப்படியே அவர்கள்போய் விசாரித்துத் திரும்பிவந்து, "ஸ்வாமீ! ஒரு பிராமணன் தன் மனைவியையும், கைக்குழந்தையையும் எடுத்துக் கொண்டு திருப்பதிக்கு யாத்திரைசெய்து, வழி தப்பி காட்டை யடைந்து அலைந்து தெய்வத் திருவருளால் அந்த அக்ரஹாரத்தை இரவு ஒன்பது நாழிகைக்குமேல் அடைந்தான். அங்கே புலி முதலிய துஷ்ட மிருகங்களின் உபத்திரவத்தால் அக்ரஹாரவாஸிகள் அனைவரும் கதவை மூடித் தாளிட்டிருந்தனர். அவர்கள் ஒவ்வொரு வீட்டையும் தட்டிப் பார்த்தும் ஒருவரும் கதவு திறக்கவில்லை. அதனல் அவர்கள் ஆலயத்தை யடைந்து, அன்றிரவை ஆலயத்திற்குள் கழித்து மறுதினம் செல்லலாம் என்று நினைத்து கதவைத் தட்டிப்பார்க்க, அது உள் தாளிடப் பட்டிருந்தது கண்டு பெரிதும் மனம் வாடினர்கள். பிராமணன் மாத்திரம் மதிலின்மேல் ஏறி உட்பிரவேசித்துக் கதவைத் திறக்கலாம் என்று மதிலின்மேலேறிக் குதித்தான். குதித்த இடத்தில் ஒரு கிணறு இருந்தது. அவன் அதில் விழுந்து இறந்துவிட்டான். அவன் மனைவி உள்ளேசென்ற புருஷன் நெடுநேரம் வரையில் வராமையால் காரணம் அறியாது தக்கித்துப் பொழுதுவிடியுமட்டும் புலம்பிக் கொண்டிருந்தாள். பின்பு ஊரார் அங்கு வந்து கதவைத் திறந்து பார்க்க, பிராமணன் கிணற்றில் விழுந்து உயிர் துறந்து கிடப்பதைக்கண்டு அப்பிணத்தை மேலே எடுத்த

னர். இறந்தவன் மனைவி அவர்மேல் விழுந்து அழுது கொண்டிருக்கிறாள்'' என்று நடந்ததை ஒன்று விடாமல் உரைத்தனர். அதுகேட்ட த்யாகராஜர் மனமிரங்கி அங்கு சென்று இறந்தவனைப் பார்த்தார். அவன் கழுத்திலணிந்திருந்த துளசிமாலையைக் கண்டு அவன் அரிதாசனுவதை யுணர்ந்து அவனுக்கு உயிர் தந்தருளுமாறு, 'நாஜீவாதார' என்னும் கீர்த்தனையால் ஸ்ரீராமரைப் பிரார்த்திக்க, அவன் உறங்கினவன்போல் உயிர்பெற்றெழுந்து, ஸ்வாமிகளை நமஸ்கரித்து விடை பெற்றுக்கொண்டு திருப்பதியை யடைந்தான். த்யாகராஜரும் தமது வாசஸ்தலத்தை யடைந்தனர். பல்லக்குச் சுமந்துவந்த கள்வரும் நற்புத்தி யடைந்து, ஞானவைராக்யமுற்று அவ்விடத்தே தங்கி ஸ்ரீராமபஜனஞ் செய்துக்கொண்டு ஆநந்தம் கொண்டிருந்தனர்.

சிலநாளைக்குப் பிறகு த்யாகராஜஸ்வாமிகள் 'ஜூதாமுராரே' என்னும் கீர்த்தனத்தைப் பாடி பூலோக வைகுண்டமென்கிற ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தை யடைந்து ஸ்ரீரங்கநாதரை ஸேவித்து, 'ஓ ரங்கஶாயீ' 'கருணஜூடவையா' 'ராஜு வெடலெ' என்னும் கீர்த்தநங்களைப்பாடி அவ்விடத்தைவிட்டு பஞ்சநத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தனர்.

சிறிது காலத்திற் கெல்லாம் அய்யரவர்கள் ஸஹதர்மசாரியா யிருந்த அவரது பத்னி தேகவியோக மடைந்தார். பத்தினியின் வியோகத்தால் சற்று கலங்கினவராய், 'தொலிஜந்மமுன' என்னும் கீர்த்தனத்தைப் பாடி மனந் தேறினர்.

முடிவில் ஒருநாள் அய்யரவர்களின் முன்னிலையில் ஸ்ரீராமபிரான் தோன்றி, 'அப்பனே! இன்றைக்குப் பத்தா

வதுமாதத்தில் நீ உயிற் றுறப்பாய். ஆனால் நீ இன்னுமொரு ஜன்மம் எடுக்கவேண்டி வரும் என்று சொல்லி மறைந்தனர். அப்பொழுது அய்யரவர்கள் மறுஜன்மம் வருமே என்கிற பயத்தினால் இராமனைப் பலவாறு வேண்டி, 'க்ஷீணமை திருகஜன்மிம்சு' 'மோக்ஷமு கலதா' 'நீதய ராவலெல்கா' 'இதி நீகு செந்தகே ஸதா' 'விடஜாலதுரா' 'பட்டிவிடுவராது' 'ஸாதிஞ்சனே' முதலிய பல கீர்த்தனங்களைப்பாடி இராமனை இடைவிடாது தியானித்துவந்தனர். இப்படி ஒன்பதுமாதம் இருபது தினங்களும் சென்ற மறுநாள் ஸ்ரீராமபிரான் அய்யரவர்களுடைய வேண்டுகோளுக் கிணங்கி தான் நேரில் தோன்றி தன் நிஜதரிசினத்தைத் தந்து அய்யரவர்களை நோக்கி, 'அப்பனே! உன் வைராக்கியத்திற்கு மெச்சினேன். நீ உடனே ஸன்யாஸம் வாங்கிக் கொள்வாயாக. இனி யுனக்கு ஜன்மம் வராதொழிக. இன்றைக்குப் பத்தாவது தினத்தில் என்னுடைய ஸாயுஜ்யத்தை நீயடைவாயாக என்று கட்டளையிட்டு மறைந்தனர். உடனே அய்யரவர்கள் பரமானந்த மடைந்தவராய், 'கிரிபை நெலகொன்ன' என்னும் கீர்த்தனத்தைப் பாடினர்.

பிறகு வேதவிதிப்படி நடப்பவர்களாகிய அந்தணர்களையும், பாகவதோத்தமர்களையும் வரவழைத்து, தான் விதிப்படி ஸந்யாஸம் வாங்கிக்கொண்டு, பகவான் நியமித்த பத்தாவது தினமாகிய கலி நாலாயிரத்துத் தொளாயிரத்து நாற்பத்தெட்டாவது ஆண்டாகிய (4948) பராபவ வருடத்தில் புஷ்ய பஹுள பஞ்சமி திதியில் ப்ரஹ்ம ஸ்வரூபமாய் பிரகாசித்து, கபாலத்திலிருந்து ஓர் அற்புத ஜோதியுண்டாகி ஆகாய மார்க்கமாய்ப் போகவே,

-சகல ஜனங்களும் தரிசித்து ஆச்சரிய மடைந்தார்கள். ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பெய்தது. கானத்தில் கந்தர்வர்களுக்குச் சமமான அவர் சிஷ்யர்கள் ஸ்ரீராம பஜனம் செய்தனர். அதன் பிறகு மற்ற காரியங்களை வெகு விமரிசையாய் செய்து முடித்தனர். உடனே ஸ்ரீ த்யாகராஜ ஸ்வாமிகளை ஸந்யாஸ விதிப்பிரகாரம் காவேரிநதி தீரத்தில் சமாதிசெய்து மஹாபிஷேகமும் செய்வித்தார்கள். அதன் பேரில் துளஸிசெடி மேடை கட்டினார்கள். அந்த சமாதி இப்போதும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. இவர் சமாதியையும், சிரத்தையுடன் தரிசிப்பவர்கட்கும் இவரது சரித்திரத்தை வாசிப்பவர்களுக்கும் இவர் கீர்த்தனங்களை கானம் செய்கிறவர்கட்கும் ஸ்ரீராமருடைய கிருபை மிகவும் உண்டாகுமென்பதில் சந்தேகமில்லை.

முற்றிற்று.





# அட்டவணை

## மேளகர்த்த ராக வரிசைக் கிரமமாக ஜனக ஜந்ய ராகங்களி லடங்கிய கீர்த்தனைகள்

| மே. | ராகம். | கீர்த்தனை. | தாளம். |
|---|---|---|---|
| 2 | ஸ்ரீமணி | எமம்து$^{v}$நே விசித்ரமுநு | தே$^{v}$ஶாதி$^{v}$ |
| 4 | வநஸ்பதி | பரியாசகமா | ரூபகம் |
| | ரஸாவளி | அபராத$^{v}$முநு | ஆதி$^{v}$ |
| 5 | மாநவதி | எவரிதோநே தெ$^{v}$ல்புது$^{v}$ | தே$^{v}$ஶாதி$^{v}$ |
| | மநோரஞ்ஜநி | அடுகாராத$^{v}$நி | ஆதி$^{v}$ |
| 8 | ஹநுமதோடி$^{v}$ | ஆரகி$^{v}$ம்பவே | ரூபகம் |
| | | எவரு தெலியநு | ,, |
| | | எம்து$^{v}$கு த$^{v}$யராது$^{v}$ | த்ரிபுட |
| | | எம்து$^{v}$தா$^{v}$கி$^{v}$நாடோ$^{v}$ | சாபு |
| | | ஏமநி மாடாடி$^{v}$திவோ | ஆதி$^{v}$ |
| | | ஏநி சேவிதே நேமி | சாபு |
| | | கட$^{v}$தேரராதா$^{v}$ | தே$^{v}$ஶாதி$^{v}$ |
| | | கத்$^{v}$த$^{v}$ந்நவாரிகி | ஆதி$^{v}$ |
| | | கருணஜூட$^{v}$வம்ம | ஆதி$^{v}$ |
| | | கொலுவமரெ க$^{v}$த$^{v}$ | ஆதி$^{v}$ |
| | | கோடிநது$^{v}$லு | ஆதி$^{v}$ |
| | | க$^{v}$திநீவநி நே | ஆதி$^{v}$ |
| | | சேவிநதெ$^{v}$ல்ல | ஆதி$^{v}$ |
| | | தப்பிப்$^{v}$ரதிகி | ரூபகம் |
| | | தா$^{v}$சுகோவலெநா | ஜம்ப |

| மே. | ராகம். | கீர்த்தனே. | தாளம். |
|---|---|---|---|
| 8 | ஹநுமதோடி$^{V}$ | தா$^{V}$ஸரதெ, நீறுணமு | ஆதி$^{V}$ |
| | | தொ$^{V}$ருகுநா யநி | ஜ,ம்ப |
| | | நிநுவிநாஸகமு | ரூபகம் |
| | | நீத$^{V}$ய ராவலெ | ஆதி$^{V}$ |
| | | நீவம்டிதை$^{V}$வமு | ஆதி$^{V}$ |
| | | ப்ரொத்$^{V}$து$^{V}$ பொய்யேநி | சாபு |
| | | ப்$^{V}$ரும்தா$^{V}$வநலோல | ரூபகம் |
| | | முந்நுராவண | ஜ,ம்ப |
| | | ரே மாநஸ | ரூபகம் |
| | | வாரிதி,$^{V}$நீகு | சாபு |
| | | ஹரியநுவாநி | ஆதி$^{V}$ |
| | அஸாவேரி | ஏபநிகோ ஜந்மிம்சி | ஆதி$^{V}$ |
| | | ஜநகஜாஸமேத | ரூபகம் |
| | | த$^{V}$ஸரத,நந்த$^{V}$ந | ஆதி$^{V}$ |
| | | நம்மகநே மோஸ | ரூபகம் |
| | | மாபாலவெலஸி | ஆதி$^{V}$ |
| | | லேகநா நிந்நு | ஆதி$^{V}$ |
| | | ஸமயமு தெ$^{V}$லிஸி | சாபு |
| | | ஸாரிவெட$^{V}$லிந யீகாவேரி | ஆதி$^{V}$ |
| | | ராரா மாயிம்டிதா$^{V}$க | தே$^{V}$ஸாதி$^{V}$ |
| | ஆஹிரி | ஆத$^{V}$ய ஸ்ரீரகு,வர | ஆதி$^{V}$ |
| | | ஏடுல காபாடு$^{V}$து$^{V}$ | த்ரிபுட |
| | | சல்லரே ராம | சாபு |
| | | நீலக,$^{V}$நஸ்யாம | த்ரிஸ்ரலகு,$^{V}$ |
| | | பூலபாந்புமீத$^{V}$ | ,, |
| | க,$^{V}$ம்டா | இந்நாள்ளு நந்நேலி | த்ரிபுட |

| மே. | ராகம். | கீர்த்தனை. | தாளம். |
|---|---|---|---|
| | கம்டா | இம்கா யோசனைதே | ஆதி |
| | | உந்நதாவுந | சாபு |
| | | எட்லாகநகொம்துநோ | சாபு |
| | | கருணாரஸாக்ஷாய | ஜம்ப |
| | | காரவிம்பராதா | ரூபகம் |
| | | ஜயமங்களம் | ஜம்ப |
| | | பெருகுபாலு | ஆதி |
| | | ராமராமராம | ஜம்ப |
| | தேஸிகதோடி | இந்நாள்ளவலெ விம்த | சாபு |
| | | நமோநமோ ராகவாய | த்ரிஸ்ரலகு |
| | | நே பொகடகும்டே | ஜம்ப |
| | | ராஜநவெடலெ | ரூபகம் |
| | | ரூகலு பதிவேலுந்ந | ஆதி |
| | தந்யாஸி | ஜாநகீநாயக | ஆதி |
| | | த்யாநமே வரமைந | ஆதி |
| | | நீசித்தமு நிஸ்சலமு | சாபு |
| | | ராமாபிராம | ஆதி |
| | | ஸ்யாமஸுந்தராம்க | ரூபகம் |
| | | ஸ்ரீராமதாஸதாஸோஹம் | சாபு |
| | | ஸம்கீதஜ்ஞாநமு | ஆதி |
| | புந்நாகவராளி | இதிநீகு மேரகாது | ஆதி |
| | | இம்த பாக்யமநி | சாபு |
| | | இம்துகா யீதநுவு | சாபு |
| | | எவரு தெலியநு | சாபு |
| | | ஏநோமுநோசிதிமோ | ரூபகம் |
| | | க்ருஷ்ண மாகேமிதோவ | சாபு |

| மே. | ராகம். | கீர்த்தனே. | தாளம். |
|---|---|---|---|
| | புந்நாகவராளி | கம்தமு புய்யருகா | ஆதி |
| | | தவதா ஸோஹம் | ஆதி |
| | | பாஹிகல்யாண | சாபு |
| | | மாநஸ ஸம்சர | சாபு |
| | | ஹரிஹரி நீயொக்க | ஆதி |
| | பூபாலமு | தீநஜநாவந | சாபு |
| | ஶுத்தஸீமம்தி | ஜாநகீரமண | ஆதி |
| 9 | தேநுக | தெலியலேரு ராம | தேஶாதி |
| | பிந்நஷட்ஜம | ஸரிவாரிலோந | தேஶாதி |
| 11 | கோகிலப்ரிய | தாஶரதெ தயா | தேஶாதி |
| | வர்தநி | மநஸா மநஸாமர்த்ய | ரூபகம் |
| 12 | ரூபவதி | நே மொரபெட்டிதே | த்ரிபுட |
| 13 | கலகம்டி | ஶ்ரீஜநகதநயெ | ஆதி |
| | கலகட | ஸமயமு ஏமரகே | ஆதி |
| | ஜஞ்ஜாஹஞ்ளி | பராகுஜேஸிந | ஆதி |
| 14 | வகுளாபரண | ஏராமுநி நம்மிதிநேர் | த்ரிபுட |
| | வஸம்தபைரவி | நீதயராதா | ரூபகம் |
| | | ரமாரமண | ஆதி |
| 15 | மாயாமாளவ | துலஸீ தளமுலசே | ரூபகம் |
| | | தேவி ஶ்ரீதுளஸம்ம | ஆதி |
| | | மேருஸமாநதீர | தேஶாதி |
| | | விதுலகு ம்ரொக்கெத | ,, |
| | குஜ்ஜரி | வராலம்து கொம்மகி | ஆதி |
| | குண்டக்ரிய | இம்தநுசு வர்ணிம்ப | ஆதி |
| | கௌரீ | ஜயஜய ஶ்ரீரகு | ஆதி |
| | கௌள | துடுகுகல | ஆதி |

| மே. | ராகம். | கீர்த்தனை. | தாளம். |
|---|---|---|---|
| | கௌளிபந்து | எந்தபாபிநைதி | சாபு |
| | | காவிச்சேதேகொப்பாய | ஆதி |
| | | தெரதியகராதா | ஆதி |
| | | மோஸபோகு விநவே | ஆதி |
| | | ராமக்ருஷ்ணுயநரே | ஆதி |
| | ஜகந்மோஹினி | மாமவஸததம் | ஆதி |
| | | ஸோபில்லு ஸப்தஸ்வர | ரூபகம் |
| | டக்க | ராகாஸுதிவதந | ஆதி |
| | நாதநாமக்ரிய | கருணுஜலதெ | ஆதி |
| | | ஜயமங்களம் | ஆதி |
| | | மங்கள மவநீஸுத | ஆதி |
| | புராஜு | வரமைந நேத்ரோத்ஸவ | சாபு |
| | பௌளி | மேலுகோவய்ய | ஜம்ப |
| | ரேவகுப்தி | க்ரஹபலமேமி | தேஸாதி |
| | லலித | ஸீதம்ம மாயம்ம | ரூபகம் |
| | வஸந்த | எட்லா தொரிகிதிவோ | ஆதி |
| | ஸாவேரி | இந்தகந்நதெல்ப | சாபு |
| | | இந்த தாமஸமைதெ | சாபு |
| | | கந்நதல்லிநீவு | ஆதி |
| | | கர்மமே பலவந்த | சாபு |
| | | சாலுசாலுநீ | ரூபகம் |
| | | ஜேஜேஸீதாராம | சாபு |
| | | தீருநா நாலோநி | ஜம்ப |
| | | துலஸீ ஜகஜ்ஜநி | ரூபகம் |
| | | தரிதாபுலேக | தேஸாதி |
| | | நீவுப்ரோவவலெ | ஆதி |

| மே. | ராகம். | கீர்த்தனை. | தாளம். |
|---|---|---|---|
| | ஸாவேரி | பராஶக்திமநு | ஆதி |
| | | பலமுகுலமு | ரூபகம் |
| | | ராமபாணத்ராண | ஆதி |
| | | ராமம் பஜேஹம் | ஆதி |
| | | ராமாபிராம | ஜம்ப |
| | | ஸ்ரீராமசந்த்ர | ஆதி |
| | | ஸ்ரீராமராம | ஆதி |
| | | ஸ்ரீராமராமா | சாபு |
| | | ஸம்ஸாருலைதெ | ஆதி |
| | ஸிந்துராமக்ரிய | தேவாதிதேவ | தேஶாதி |
| | | ஸுதாமாதுர்ய | ஆதி |
| | ஸௌராஷ்ட்ர | அல்லகல்லோல | ஆதி |
| | | எந்தோ ரக்ஷிம்பிதே | ஆதி |
| | | எம்நநுசு வர்ணிம்து | சாபு |
| | | ஏமநி கொரநம்மு | சாபு |
| | | ஏமேமோ தெலியக | சாபு |
| | | குமகும | சாபு |
| | | ஜலகமாடுவேள | சாபு |
| | | தேவராமராம | ரூபகம் |
| | | நீகாமரூபமுநகு | ஆதி |
| | | நீவே கநெட | சாபு |
| | | நேரமா ராம | தேஶாதி |
| | | பாஹிபாஹிதீநபம்தோ | ஜம்ப |
| | | பாஹிமாம் ஹரெ | ரூபகம் |
| | | முநு மம்தரகிரி | சாபு |
| | | மேனுகோ த்யாகிதே | ரூபகம் |

| மே. | ராகம். | கீர்த்தனை. | தாளம். |
|---|---|---|---|
| | ஸௌராஷ்ட்ர | மேலுமேலு ராம | ஆதி |
| | | ராரா நந்நேலுகோரா | சாபு |
| | | ராமராம கோவிந்த | ஆதி |
| | | விநயமுநநு | சாபு |
| | | ஸ்ரீ கணபதிநி ஸேவிம்ப | ஆதி |
| 16 | சக்ரவாகம் | எடுலப்ரோதுவோ | த்ரிபுட |
| | | ஸுகுணமுலே | ரூபகம் |
| | களாவதி | எந்நடு ஜூதுநோ | ஆதி |
| | | ஒகபாரிஜூடக | ஆதி |
| | பிம்துமாலிநி | எம்தமுத்தோ எம் | ஆதி |
| | மலயமாருத | மநஸா எடுலோர்துநே | ரூபகம் |
| | வேகவாஹிநி | சல்லகா நாதோ | ஆதி |
| 17 | ஸூர்யகாம்தம் | முத்துமோமு யேலாகு | ஆதி |
| | பை,ரவம் | மரியாத காதயா | தேஶாதி |
| | ஸுப்ரதீபம் | வரஶிக,வாஹந | ஆதி |
| 19 | ஜ,ம்காரத்,வநி | ப,ணிபதிஶாயி | ஆதி |
| | சித்தரஞ்ஜநி | நாததநுமநிஶம் | ஆதி |
| | பூர்ணலலித | கலுகுநா பத | ஆதி |
| 20 | நட,பை,ரவி | ஆநம்தமாநம்த | ஆதி |
| | | இம்துகாபுட்டிம்சிதி | ஆதி |
| | | உபசாரமுஜேஸெ | ரூபகம் |
| | | உபசாரமுலநு | ஆதி |
| | | ஏநாடிநோமு | ஆதி |
| | | கொலுவை யுந்நாடெ | ஆதி |
| | | தநயம்தே ப்ரேம | சாபு |
| | | தநயுநிப்ரோவ | ஆதி |

| மே. | ராகம். | கீர்த்தனை. | தாளம். |
|---|---|---|---|
| | நடபைரவி | நம்மிநவாரிகி | ஆதி |
| | | நிஜமைதெ மும்தர | சாபு |
| | | நீவம்டி தைவமு | ஆதி |
| | | ரகுநாதப்ரோவவே | ஆதி |
| | | ரக்ஷபெட்டரே | ஆதி |
| | | ராமகோதண்டராம | ஆதி |
| | | லலிதெ ஸ்ரீப்ரவ்ருத்த | ஆதி |
| | | ஸ்ரீநாரதமுநெ குரு | ஆதி |
| | | ஸ்ரீரகுவர ஸுகுணாலய | ஆதி |
| | | ஸர்வாம்தர்யாமி | ஆதி |
| | அம்ருதவாஹிநி | ஸ்ரீராமபாதமா | ஆதி |
| | ஆநம்தபைரவி | நீகே தெலியக | ஆதி |
| | | ராமராம நீவாரமு | ஆதி |
| | | க்ஷீரஸாகரவிஹார | ஜம்ப |
| | ஆபேரி | நகுமோமு கநலேநி | ஆதி |
| | கோகிலவராளி | ஸமுகாநநில்வ | தேஶாதி |
| | ஜயம்தஸ்ரீ | மருகேலரா | தேஶாதி |
| | ஜிங்க்ல | அநாதுடநுகாநு | ஆதி |
| | தேவக்ரிய | நாடிமாடமரசிதி | ஆதி |
| | நாககாம்தாரி | ஓராமராம | சாபு |
| | மார்கஹிம் | சலமேலரா | தேஶாதி |
| | ரீதிகௌள | சேரராவதேமிரா | தேஶாதி |
| | | ஜோஜோரகுகுல | ஆதி |
| | | த்வைதமுஸுகமா | தேஶாதி |
| | | நந்நு விடசிகதலகு | சாபு |
| | | நீதயகல்குடே | ஆதி |

| மே. | ராகம். | கீர்த்தனை. | தாளம். |
|---|---|---|---|
| | ரீதிகௌ$^{V}$ள | பரிபாலய | ஆதி$^{V}$ |
| | | ப$^{V}$ட$^{V}$லிகதீ$^{V}$ர | ஆதி$^{V}$ |
| | | பா$^{V}$லெபா$^{V}$லேம்து$^{V}$ | ஆதி$^{V}$ |
| | | ராக$^{V}$ரத்நமாலிக | ரூபகம் |
| | | ஸீதாநாயக | சாபு |
| | வஸம்தவராளி | பாஹிராமதூ$^{V}$த | ரூபகம் |
| | ஶுத்$^{V}$த$^{V}$தே$^{V}$ஶி | எம்து$^{V}$கௌக$^{V}$லிம்து | ஆதி$^{V}$ |
| | | ரகு$^{V}$நம்த$^{V}$ந | தே$^{V}$ஶாதி$^{V}$ |
| | ஸாரமதி | மோக்ஷமுக$^{V}$லதா$^{V}$ | ஆதி$^{V}$ |
| | ஹிம்தோ$^{V}$ள | மநஸுலோநி மர்ம | தே$^{V}$ஶாதி$^{V}$ |
| | | ஸாமஜ வரக$^{V}$மந | ஆதி$^{V}$ |
| | ஹிம்தோ$^{V}$ளவஸம் | ராரா ஸீதாரமணி | ரூபகம் |
| 21 | கீரவாணி | சலிகி$^{V}$யும்டே கதா$^{V}$ | ஆதி$^{V}$ |
| | கல்யாணவஸம்த | கநுலு தாகநி | ரூபகம் |
| | | நாத$^{V}$லோலுடை$^{V}$ | ரூபகம் |
| | கிரணாவளி | ஏடியோசநலு | தே$^{V}$ஶாதி$^{V}$ |
| | | பராகுநீகேலரா | தே$^{V}$ஶாதி$^{V}$ |
| 22 | கரஹரப்ரிய | எவரநி நிர்ணயிம்சிரி | ஆதி$^{V}$ |
| | | கோரிஸேவிம்பராரே | ஆதி$^{V}$ |
| | | சக்கநி ராஜமார்க$^{V}$மு | ஆதி$^{V}$ |
| | | சித்ரரத்நமய | ஆதி$^{V}$ |
| | | சேதுலார ஶ்ரும்கா$^{V}$ரமு | ஆதி$^{V}$ |
| | | நட$^{V}$சிநட$^{V}$சி | ஆதி$^{V}$ |
| | | பக்கலநிலப$^{V}$டி$^{V}$ | த்ரிபுட |
| | | பாஹிராமராம | த்ரிஶ்ரம் |
| | | ரகு$^{V}$வீர ரணதீ$^{V}$ர | ரூபகம் |
| | | ராமகோத$^{V}$ண்ட$^{V}$ராம | சாபு |
| | | ராமநீயெட$^{V}$ | மத்$^{V}$யாதி$^{V}$ |
| | | ராம நீ ஸயாந | ரூபகம் |
| | | விட$^{V}$முஸேயவே | ஆதி$^{V}$ |

| மே. | ராகம். | கீர்த்தனை. | தாளம். |
| --- | --- | --- | --- |
| | ஆபோகி | நந்நுப்ரோவ நீ | தேசாதி |
| | | மநஸாகில்பஶக்தி | ஆதி |
| | கந்நட்கௌள | ஓரஜூபுஜூசேதி | தேசாதி |
| | | ஸொகஸாஜூட | ரூபகம் |
| | களாநிதி | சிந்ந நாடெநா | தேசாதி |
| | காபி | அதடே தந்யுடுரா | சாபு |
| | | அந்யாயமுஸேயக | ஆதி |
| | | இந்தஸௌக்யமநி | ஆதி |
| | | எந்நாள்ளூ நீதோவ | சாபு |
| | | சூதாமுராரே | சாபு |
| | | நித்யரூப யெவரி | ரூபகம் |
| | | பாஹிகல்யாணராம | ஆதி |
| | | பாஹிமாம் ஸ்ரீராம | ஜம்ப |
| | | மீவல்ல குணதோஷ | ஜம்ப |
| | | ராமபாஹிமேக | சாபு |
| | | ராம ரகுகுல | ரூபகம் |
| | | ஸாந்த்ர தஶரத | ,, |
| | காநட | ஸ்ரீநாரதநாத | ,, |
| | | ஸாகியெவரோ | தேசாதி |
| | ஜயநாராயணி | மநவிநி விநுமா | ஆதி |
| | ஜயமநோஹரி | நீபக்திபாக்ய | ரூபகம் |
| | | யஜ்ஞாதுலஸாகமநு | ஆதி |
| | | ஸ்ரீரம்யசித்தா | ஆதி |
| | ஜயம்தஸேந | விநதா ஸாதவாஹந | தேசாதி |
| | தர்பாரு | அபராதமுலமாநபி | ஜம்ப |
| | | எந்துண்டிவெடலிதி | த்ரிபுட |
| | | எதி நீபாஹாபல | ஆதி |
| | | ஏல தெலியலேரு | சாபு |
| | | நாரதகுருஸ்வாமி | ஆதி |
| | | பரிபாலயமா | சாபு |

| மே. | ராகம். | கீர்த்தனை. | தாளம். |
|---|---|---|---|
| | த்ர்பாரு | முந்துவெநக | ஆதி |
| | | யோசநகமல | ஆதி |
| | | ராமலோபமேல | ஆதி |
| | | ராமாபிராம | சாபு |
| | தேவமநோஹரி | எவரிகை யவதார | சாபு |
| | | கந்நதண்ட்ரி நாபை | தேஶாதி |
| | | குலபிருதுநு | ரூபகம் |
| | நாதவராங்கிணி | ந்ருபாலவால | ஆதி |
| | நாயகி | சநுகொநுஸௌக்யமு | ரூபகம் |
| | | தயலேகிப்ரதுகேமி | ஜம்ப |
| | | நீபஜநகாந | ஆதி |
| | பூர்ணஷட்ஜம | லாவண்யராம | ரூபகம் |
| | | ஶ்ரீமாநி நீ மநோஹர | தேஶாதி |
| | பலமஞ்ஜரி | ஸநாதநபரம | தேஶாதி |
| | ப்ருந்தாவநஸாரங் | கமலாப்தகுல | தேஶாதி |
| | மணிரங்கு | ராநிதிரா து | ஆதி |
| | மத்யமாவதி | அடிகிஸுகமு | ரூபகம் |
| | | அலகலல்லாடக | ” |
| | | எவரிச்சிரிரா | ஆதி |
| | | தேவ ஶ்ரீதபஸ்தீர்த | திரிபுட |
| | | நகுமோமுகலவாநி | ஆதி |
| | | நளிநலோசந | சாபு |
| | | நாதுபை பலிகேரு | ஜம்ப |
| | | முச்சட ப்ரஹ்மாதுலு | ஆதி |
| | | ராமகதா ஸுதாரஸ | மத்யாதி |
| | | ராமநாமம் பஜ | ஆதி |
| | | ராம ஸமயமு | ஆதி |
| | | விநாயகுநிவலெ | ஆதி |
| | | வேம்கடேஶ நிநு | ஆதி |
| | | ஶரணுஶரண நசு | ஆதி |
| | | ஶ்ரீராம ஜயராம | ஆதி |

